இந்தப் பிரார்த்தனைப் பத்தைப் பாடி யோய்ந்தபின் குயிலினைப் பழித்த வோர் குரலினுள் பின்வரும் "திருப்புலம்பல்" பாடக் கேட்டு எல்லார் மனமும் அதிலீடுபட்டு நின்றது.

"உற்றாரை யான் வேண்டேன்,
ஊர் வேண்டேன், பேர் வேண்டேன்,
கற்றாரை யான் வேண்டேன்
கற்பனவும் இனி அமையும்;
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தா!
உன் குரை கழற்கே
கற்றாவின் மனம் போலக்
கசிந்துருக வேண்டு வனே."

மனம் அனலிலிட்ட மெழுகுபோ லுருக, நாக்குழற, மயிர்சிலிர்ப்ப, என்புருக இந்தப் பாட்டைப் பாடினதுயார்? அந்த அம்மைக்கு இவ்வளவு மனக்கனிவு எப்படி யுண்டாயிற்று? அவருடைய உள்ளம் உருக பக்திரஸமொழுக அந்தஅம்மணி பாடினது எல்லார்மனத்தையும் உருகச்செய்தது. அவர் ஏதோ இன்னிசை இராகத்தோடுமட்டும் பாடினதாக வில்லை. நவரஸமுமொழுக அவர் பாடினது, அவர் உளக்கண் முன் தோன்றிய குருமூர்த்தியின்முன் அவர் சிக்ஷாதீக்ஷை பெற்றுக் கொண்டு திருவருட் பேற்றுக் கழுததுபோ லிருந்தது. உண்மை யெல்லாவற்றினும் வல்லதாகையால், அது அங்கு வேடிக்கை பார்க்க வந்துகூடிய மூடஜனங்களையும் பக்திவெள்ளத்தில் மூழ்கச் செய்து தற்போதுக்கு மனமுருகிக் கள்ளங்கரைந் துள்ளமுருகச் செய்வதா யிருந்தது. எல்லாரும் அந்த அம்மையின் குரலையும், குரலினுள்ளுறை சப்தத்தையும், சப்தத்தினுள்ளுறை த்வனியையும், த்வனியினுள்ளுறை ஜோதிப்பிரகாசமாம் மனவெளியையும், அந்தமனவெளியினுள்ளுறை முத்தொழிலியற்றும் சக்திவாய்ந்த ஜோதிர்மனத்தையும் அறியாம லறிந்து அன்பினால் கட்டப்பட்டு மந்திரத்திற் கட்டுப்பட்ட பாம்புபோல் அக்குரலினின்றெழும் வசிகரசக்தியில் ஈடுபட்டவர்களாகத் தானன்றி வேறெதுவும் தோன்றாது ஸ்தம்பித்து நின்றார்கள்.

எம்பெருமான் பாலகிருஷ்ண மூர்த்தியும் நந்தகோபாலனா யவதரித்து புல்லாங்குழ லூதிய போது பசுவினங்க ளெல்லாம் அவருடைய இன்னிசை யுள்ளிருந் தொழுகும் தேன்சுவை யின்பம் செவிமடுத்து ஸ்தம்பித்து நின்றனவே! அஃதேபோல்அங்குகூடியிருந்த பசுவின மாகிய மாந்தரெல்லாம் அவ்விசையுட் சுவையைச் செவிமடுத்து ஹிருதய புண்டரீகம் மலர்தரச் சிறுபோது ஒன்றும் தெரியாது போதை மயக்கத்தில் மூழ்கிநின்றார்கள். இவர்கள் இப்படி ஆத்மானந்தமாய் காலக்ஷேபஞ் செய்து கொண்டிருக்கையில் கிழக்கு வெளுத்தது. அவரவரும் தத்தம் காலக்கடனை முடிக்கக் கருதி கூட்டங் கலைந்து இருப்பிடஞ் சேர்ந்தனர். பிரார்த்தனைப்பத்தும், திருப்புலம்பலும் பாடிய மாதரா ரிருவரும் மட்டும் அச்சமாதியின் மேல் விழுந்து மூர்ச்சித்த வண்ணமாய்க் கிடந்தார்கள். அவர்களுடைய சமாதியைக்கலைக்க யாருக்கும் துணிவேற்பட வில்லையால், அவருடன் துணை வந்தவர் மட்டும் கொட்டகை வாயிலைச் சப்தஞ்செய்யாது சாத்திக்கொண்டு வெளியிலிருந்து காத்திருந்தார்கள்.

சூரியோதயமாகவே அவர்கள் தாமே யெழுந்து வெளிவர, எல்லாரும் வண்டியேறித் தண்டையார்ப்பேட்டையிலுள்ள தங்கள் விடுதிக்கு சென்றார்கள். வியாஸ பௌரணமை யுத்ஸவமும் இப்படியாக இனிது முடிந்தது. அமர பக்ஷத்துப் பிரதமையில் நிர்மலாநந்தமும் அவள் தோழியும் காலைபோஜனம் முடித்துக் கொண்டு காஞ்சீபுரத்துக்குப் பிரயாணமாகப் புறப்பட்டுப் போய்விட்டார்கள்.

---

## The Viceroy's Visit.

"We shall merely content ourselves with pointing out that the future History of India will set more store by Lord Hardinge's Educational Policy than Delhi Durbars and Legislative reforms; the effect of these is immediate but evanescent. As Carlyle never wearied to assert, it is not the method of voting but the elevation of national character that will improve the country; we must look to the schools and not to the hustings for being potent factors of national growth.

History now-a-days cares more to describe the people than the grandeurs of courts……… ……The desire of a people to move away from an outworn form of faith brings about a change and not so much the eloquence of a great preacher. *The movement is greater than the man.* Levees and Legislative councils do not touch, much less mould, the hearts of the common people, who alone make real history: but education will and that is why we attach such a great importance to Lord Hardinge's activities in the expansion of education in India where the night of ignorance is so thick." —*The Educational Review* for Novr. 1913.

---

## அரசர் பிரதிநிதியின் விஜயம்.

அரசர் பிரதிநிதியாம் லார்ட் ஹார்டிஞ்ச் அவர்கள் நவம்பர்மீ 24உ 12½ மணிக்குச் சென்னைவந்து சேர்ந்தார். அவரை நல்வரவு கூறியழைக்கக் குழந்தைகளும் சிறுவர்களும் ஆவலுற்றிருந்தார்கள். அவர்களுடைய ஆவல் தீர நாமும் அவர்கள் நிலைமைக்கேற்க குணமும் மணமுமாய் அவர்கள் குதலைவாய் திறந்து அரசர் பிரதிநிதியை நல்வரவு கூறியழைப்பதற்கு வேண்டிய முயற்சியெல்லாம் எடுத்துக் கொள்ளலானோம். செப்டம்பர்மீ 20உயே இதுவிஷயம் பஹிரங்கமாக விளம்புரப்படுத்தப்பட்டது. 23உயன்று நாம் கனம் சென்னை கவர்னர் அவர்களுக்கு எழுதினோம். அவரும் நமது எண்ணம் நல்லதென்றே நன்குமதித்து, முறைமைப்படி நல்வரவுபசாரப் பத்திரம் வாசிக்கக் காலமில்லையென்று வருந்தி, குழந்தைகள் நல்வரவுபசாரப் பத்திரத்தை யனுப்பிவைத்தோமானால் அவர் அதை அரசர் பிரதிநிதியிடம் சமர்ப்பிக்கச் செய்வதாகச் சொல்லி யெழுதினார்.

குழந்தைகளை யெல்லாரையு மில்லாவிடினும் கூடுமானவரையில் அவர்களைக் கூட்டி நல்வரவு கூறியழைக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று பின்னும் வற்புறுத்தி யெழுதியதற்கு, கவர்னருடைய அந்தரங்க காரியதரிசியவர்கள் கூடுமானவரையில் குழந்தைகள் சிலரையாவது பாங்குவெட்டிங் ஹாலில் சேர்க்க இடந்தருவதாகச் சொன்னார். இதைப்பற்றி அரசர் பிரதிநிதியவர்களுக்கே நாம் நேரில் எழுத அவருடைய அந்தரங்க காரியதரிசி யவர்கள் அவகாசமின்மையால் முறைமைப்படி வந்தனோபசாரம் வாசித்தளிப்பது கூடாமையா யிருக்குமென்றஞ்சுவதாகவும், ஆகிலும்நமதுகடிதத்தை சென்னை கவர்னருடைய அந்தரங்க காரியதரிசிக்கு அனுப்பி அவரைத் தீர்மானிக்கும்படி சொல்லியிருப்பதாகவும் நமக்கு எழுதினார்.

நாம் வாக்குக் கொடுத்திருந்தபடி குழந்தைகள் மாணவர்கள் வந்தனோபசார மொழியை இங்கிலீஷ்படுத்தி கனம். கௌன்ஸில் மெம்பர்கள், அட்வொகேட்-ஜெனரல் முதலாக பிரமுகர்களாயுள்ள தகுந்த கனவான்களுக்குக் காட்டித்திருத்தி அவர்களுடைய அனுமதி பெற்று கவர்னருக்கு அனுப்பிவைத்தோம். நவம்பர்மீ 1உ கவர்னருடைய அந்தரங்க காரியதரிசியைப் பார்த்தபொழுது அவர் நாமனுப்பிய வந்தனோபசாரத்தை அப்படியே அரசர் பிரதிநிதிக்குக் கொடுப்பதாகச் சொன்னார். குழந்தைகளைக் குறைந்தமட்டாக பாங்குவெட்டிங்ஹாலுக்குள் வர இடந்தருவதாகச் சொன்னார், மேலுமவர், குழந்தைகளிடத்தில் பட்சமாயிருப்பதாகவும் அவர்களை அன்பாதரவாய் நடத்துவதாகவும் சொன்னார். இதைக்கேட்டுத் திருப்தியடைய வேண்டியதாயிருந்தது. குழந்தைகளும் அப்படியே திருப்தியடைந்தவர்களாக, நவம்பர்மீ 12உ யன்று அவர் குழந்தைகளுக்களித்த வாக்கை மறந்துவிடக் கூடாதென்றும், அவர்கள் விஷயமாகச் செய்ய வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத் தவறு

திருக்கத்தப்வுசெய்ய வேண்டுமென்றும் ஞாபக மூட்டி யெழுதலானோம். உடனே மறுநாள் 13உ 1-மணிக்கு கவர்னருடைய மிலிடேரி செக்ரிடெரி காப்டன் அல்லன்ஸன் அவர்கள் அன்று 2½ மணிக்குத் தவறாமல் தன்னை வந்து பார்க்க வேண்டுமென்று வெகுமரியாதையாய் எழுதியனுப்பினார். அவரைப் போய்ப் பார்த்த தின்பேரில் குழந்தைகள் அரசர்பிரதிநிதியை வழியில் நல்வரவு கீதம் பாடியழைக்க ஏற்பாடு செய்யவேண்டுமென்றும் அதற்காகக் குறைந்தது 2,000சிறுவர்களாவது சேர்க்கவேண்டுமென்றும் சொன்னார். 2000 அல்ல,20,000 சிறுவர்கள் அரசர் பிரதிநிதியையும் ஹார்டிஞ்சு பெருமாட்டியையும் அன்போடு அழைக்க ஆவலாயிருக்கிறார்களென்றும், அதிகாரிகளுடைய மனோபீஷ்டம் தெரியவேண்டியதுதான் என்றும் சொன்னோம். 20,000 பேர்களுக்கு ஏற்பாடு செய்ய முடியாதென்றும், 2,000 பேர்கள் போதுமென்றும் சொன்னார். அப்படியே யென்று ஒத்துக்கொண்டோம்.

அதன்மேல் காப்டன் அல்லன்ஸன் கேட்டுக்கொண்டபடி போலீஸ் கமிஷனர் மிஸ்டர் ஆர்மிடேஜ் அவர்களைப்பார்க்கப் போனோம். இந்த கனவான் வந்தவர்களை வெகுநேரம் காக்கவைத்துக் கடைசியில் குழந்தைகளுப் வேண்டாம் ஒன்றும் வேண்டாம் என்றார். குழந்தைகளை வேண்டாதவராகில் நான்சொல்ல வேண்டியது ஒன்றுமில்லையென்று சொல்ல, சில நிஷ்பிரயோஜனமான கேள்விகளைக் கேட்டுவிட்டு, சலாம் செய்து அனுப்பிவிட்டார்.

நாம் உடனே நடந்ததைப்பற்றி மிலிடெரி செக்ரிடெரிக்கு எழுத விருக்கையில், அன்று சாயங்காலம் தானே அந்தரங்க காரியதரிசி யெழுதிய கடிதம் வந்து சேர்ந்தது. அதைப்பார்த்து மேலாகவேண்டிய ஏற்பாடுகளைச் செய்யலானோம். 2,000 குழந்தைகள் சேருவதற்கு வேண்டிய ஏற்பாடெடுத்துக் கொண்டு மிலிடேரி செக்ரிடெரிக்கு எழுதினோம். அவர் ஏதோ தப்பர்த்தம் செய்து கொண்டெழுதினதாகப் பட்டதைத் திருத்தி யெழுதி, குழந்தைகள் 2,000 பேர்கள் கூடுவதற்குத் தயாரா யிருக்கிறார்களென்று தெரிவித்தோம். கார்பொரேஷன் பிரெசிடெண்டு மிஸ்டர் பி எல். மூர் அவர்களையும் பார்த்தோம். அவரால் எவ்வித ஏற்பாடும் செய்வது சாத்தியமாகவில்லை யென்றுபட்டது. எப்படியும் குழந்தைகளை யழைத்துவிட்டுக் கிட்டிவந்த குழந்தைகளை எட்டித் தள்ளலாகாதென்று எல்லா விஷயங்களையும் சூக்ஷமமாகத் தானே மரியாதை தவறாது மிலிடெரி செக்ரிடெரியவர்களுக்குத் தெரிவித்து கனம் பொருந்திய கவர்னர் அவர்களுடைய அபிப்பிராயத்தை யறிந்து தெரிவிக்கும்படி யெழுதினோம். கவர்னரவர்களும் காலம் போதாதென்று விசனிக்கிறதாகத் தெரிவித்ததின்பேரில், அதுவே நல்லாசீர்வதமென்று அந்தமட்டில் அதை விட்டுவிட வேண்டியதாக நேரிட்டது. குழந்தைகளும் அடக்கம் தவறாமல், நடந்து கொண்டது பெற்றோர்மனம் களிக்கத் தக்கதாயிருந்தது

24உ யன்று 12-மணிக்கு குழந்தைகள் வந்தனோப்சாரப் பத்திரத்தை கவர்னர் மூலமாக அரசர் பிரதிநிதிக்குச்சமர்ப்பிக்கவேண்டுமென்று சொல்லி, கவர்னருடைய அந்தரங்க காரியதரிசிக்கு எழுதினோம் 22-ந்தேதி சனிக்கிழமை சாயந்திரம் அவர்கள் தீட்டிய சித்திரத்தையும் கவர்னர் அவர்களுக்கும் கனம் பென்ட்லாண்டு பெருமாட்டியாருக்கும் காட்டி அரசர் பிரதிநிதிக்கும் லேடி ஹார்டிஞ்சவர்களுக்கும் கொடுக்கும்படி அனுமதி வாங்கித் தரவேண்டுமென்று கேட்டுக்கொண்டோம். அப்படியே ஆகட்டுமென்று அந்த சித்திரத்தின் படத்தை வாங்கிக்கொண்டார்.

அரசர் பிரதிநிதி வந்து போனால் அதற்காகக் குழந்தைகள் இவ்வளவு பாடுபடுவானேன்? என்றால், அதற்கு உத்தரம், இதன் தலையில் "எடியுகேஷனல் ரிவியூ" ஆசிரியர் எழுதியிருப்பதை யெடுத்துக் குறித்திருப்பதினால் விளங்கும். தர்பார், கொலு, விருந்து, வேடிக்கைகளெல்லாம், நீரிலெழுத்துப்போல் உடனே மறைந்துபோம் தன்மையன. ஆனால் லார்ட் ஹார்டிஞ்ச் அவர்கள் கொடுத்த வித்தியாலக்ஷியமோ கல்விலெழுத்துப்போல் என்று மழியாதிருந்து பலனைத் தரும். ஜன க்ஷேமத்துக்கு இன்றியமையாதது ஹிருதயசுத்தி. அது சுத்த வித்தையினால் லபிக்கும். சுத்தவித்தையோ சமஷ்டிவித்

யா சொரூபம். ஆகையால் "சமஷ்டி சேவை சாஸன" ரூபமாகவே கனம் ஹார்டிஞ்சுபிரபுவும் நமது சக்ரவர்த்தியவர்களும் அளித்த வித்தியா லக்ஷியத்தைச் சித்திரப்படமாகத் தீட்டி யந்திர தந்திர மந்திர மென்றுள்ள வித்தியாம்சங்கள் மூன்றும் அமைய அதைச் சித்திரித்து யந்திர மாகவும், வந்தனோபசாரமொழியாக வரைந்து 'மனமொருவழிப்பட்ட மந்திரமாகவும்,' இரண்டுக்குமுள்ள பொருத்தத்தைவிளக்க அதன் உள்ளர்த்தத்தைச்சமஷ்டி 'தந்திரமாகவும்' குறிப்பிட்டு வைத்தோம். அப்படத்திலொன்றை கவர்னருக்கும் அவர்பெருமாட்டிக்கும் காட்டவென்று அவர் அந்தரங்க காரியதரிசியிடமும் கொடுத்தோம். இந்தபாலபோத சமஷ்டிசேவைசாஸனத்தை நம்குழந்தைகளும் குழந்தைமனம் மாறாத பெரியவர்களும் ஒன்று சேர்ந்து அர்ச்சித்துப் பூஜித்து அரசர்பிரதிநிதியவர்கள் அன்பு கூர்ந்து வெளியிட்ட வித்தியா லக்ஷியத்தைக் கிரகித்து சிரவணமனன நிதித்தியாஸன மென்கிற வித்யாமுறைப்படி, தம் தம் வித்தியாகுரு சொல்லக்கேட்டு, கேட்டதை மனதில் வாங்கிக் கிரகித்துக் கொண்டு, "கல்வியைக்கல்: கற்ற படிநில்!" என்ற மூதுரைப்படி வித்தியா லக்ஷியத்துக்குப் பங்கம் வராதபடி மனப்பழக்கத்தால், கல்வியில் தேர்ந்து மனதைப் பழக்கித்தேற்றக் கற்றுக்கொள்ளவேண்டும். ஏனெனில் எல்லாவித்தையும் மனதை யடக்கி யாளற் கேயின்றி வேறெதற்குமில்லை. அவ்வாயு மனத்தை யடக்கி யாண்டால அதுவே எல்லாப் பலனையும் கொடுக்கும். ஆதலால்தான் கிறிஸ்துவும் "பகவத் கிருபையைப் பெற முயலுங்கள்: அது ஸர்வஸாம்ராஜ்யத்தையும் கொடுக்கும்" என்றார். மனம் என்பது மதங் கொண்ட யானைக்குச் சமானம். அதை விவேகம் என்கிற அங்குசத்தால் அடக்கியாளவேண்டும். இதற்கு இஷ்டதேவதா உபாஸனையும் குருவருள் சித்தியும் அவசியமாம்.

வாய்மையால் அகம் தூய்மையானவர்களுக்கு இவை தானே வந்து சித்திக்கும். அகத் தூய்மை பெறாதவர்கள் சமஷ்டி சேவை செய்து (ஊருக்குழைத்து உண்மைபுணர்ந்து) ஹிருதய சுத்தி பெறவேண்டும். ஹிருதய சுத்திபெறுதலே சமயதீக்ஷைகளின் நோக்கமும் முடிவுமாம். ஹிருதயசுத்தி பெற்றால் 'திருவராக்ஷதர்கள்' கிட்டிவந்து வேதனை செய்யார்கள். துருவன் குழந்தைப் பருவத்தில் பகவானைக் காண நினைத்து எளிதில்தானே தரிசனம் பெற்றதுபோல், ஹிருதயசுத்தமுடையவர்கள் வெகு சுலபமாக பகவத்கிருபைக் காளாகலாம். ஹிருதயசுத்தம் கெடாத குழந்தைகள் தம் குழந்தைமனம் மாறாதபடி போதிக்க வேண்டியது உபாத்தியாயர்களுடைய கடமையாம். போதகருக்கும் போதனை பெறுவோருக்கும் "பாலபோத சமஷ்டிசேவை சாஸனம்" என்கிற "குழந்தைகளுடைய உள்ளக்குறிப்பு" பரம சாதனமாக உதவுமென்று நம்பியே, வெகு மூடுதலாகவும் தேவரஹஸியமாகவுமுள்ள அவ்யக்தரூபமான சமஷ்டி-தரிசனலக்ஷியத்தைச்சித்திரரூபமா யெழுதி உபாஸனார்த்தமாக வெளியிட்டோம். இது பூஜ்யாருகமானதால் அசுத்த மனமுடையோர்க்கு இதனுண்மை உள்ளத்திற் படுவது அஸாத்தியம். சுத்த மனத்திற்கு எல்லாம் தானே விளங்கும். ஏனெனில் அவர்கள் உள்ளத்தில் தேஜோமயமாக விளங்குவதைத் தானே சித்திரலக்ஷணம் பொருந்தத் தீட்டியுள்ளோம். அகத்திற் காண்பதைப்புறத்திலும், புறத்திற் காண்பதை அகத்திலும் தரிசித்து, அகம்புறம் இரண்டுமொன்றாக விளங்குவதே வித்தியாலக்ஷிய சாதகமும் சாத்தியமுமாம். அதற்கு லண்டன் டைம்ஸ் பத்திரிகையில் 'Rhythm and purpose" என்றுள்ள விஷயப் பிரகாரம், அதற்கு "பாலபோத சமஷ்டிசேவை சாஸனம்" உண்மைச் சாதனமாகவிருந்துதவும். எப்படியும், "சாதனமின்றிச் சாதிப்பாரில்லை" என்பது உண்மையே. இந்த"பாலபோதசமஷ்டி சேவைசாஸனத்தை" உபயோகித்து சாதனம் செய்ய விரும்பும் உபாத்தியாயர்கள் லலிதாலயம், லலிதா விலாஸ வித்யாசங்கத்துக்கு (The Lalita Publishing Co.) இந்த விவேகசிந்தாமணியின் 247-8-வது பக்கங்களில் காணப்படும் நமூனாக் களில் கண்டுள்ள விவரங்களைக் குறித்தெழுதித் தம் பள்ளிப்பேருடன் தம்பேரையும் பதியவைத்துக் கொள்ளவேண்டியது: விவேகசிந்தாமணி மூலமாகவன்றி நேரில் பதில் அனுப்புவது சாத்தியமில்லை யென்பதைக் கவனிக்கக் கோருகிறோம்.

---

### வரகவி ரவீந்திரநாத் தாகோர் 'நோபேல் பரிசு' பெற்றது.

'ஆல்ப்ரெட் நோபெல்' என்பவர் ஸ்வீடன் தேசத்தில் பிறந்த வித்வான். இவர் சாஸ்திர விசாரத்தில்தேர்ந்தவர். 'டைனமைட்' (Dynamite) என்று சொல்லும் அபார சக்தியுள்ள வெடி மருந்து கண்டுபிடித்தவர் இவர்தான். இவர் 1896 ம் வருஷம் டிஸம்பர் மாதம் 10௳ காலஞ்சென்றார். அப்பொழுது அவருடைய ஆஸ்தியாயிருந்த $17\frac{1}{2}$ லக்ஷம் பவுனையும் பொது நலத்துக் குழைத்துப் புண்ணியம் கட்டிக்கொண்ட பேர்களுக்குப் பரிசளிக்கும்படி உயில் செய்து வைத்துப்போனார். இந்தப்பரிசு ஐந்து பாகமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொன்றும் ஒரு துறையிலிறங்கி யுழைப்பார்க்குப் பரிசாகக் கொடுக்க வைக்கப்பட்டிருக்கிறது. பொது நலத்துக் குழைப்போர் பரிசு பெறத்தக்க ஐந்து துறைகளாவன:—

(1) பௌதிக சாஸ்திரம்; (2) ரஸாயனம்; (3) வைத்தியம் அல்லது தேஹதத்துவ சாஸ்திரம்; (4) இலக்கியம் (Literature); (5) சமாதானக்காப்பு (Preservation of Peace). இந்த வித்வான் செய்த உயில்படி முதற்பரிசு அவர் இறந்த 5-வது வருஷம், அதாவது 1901–ம் வருஷம் டிஸம்பர்மீ 10௳ கொடுக்கப்பட்டது. இலக்கிய வகுப்பில் பரிசு பெற்றவர்களில் இந்தியா சம்பந்தப்பட்டவர் இதுவரையில் ருடியர்ட் கிப்ளிங் ஒருவர்தான். இந்தவருஷம் கீதாஞ்சலி கர்த்தாவாகிய வரகவி ரவீந்திரநாத் தாகோர் அவர்களுக்கு இந்த 'நோபெல் பரிசு' (Nobel Prize) இலக்கியத்துறையில் அளிக்கப்பட்டிருக்கிறது. இப்பரிசின்தொகை 8000 பவுன். அதாவது லக்ஷத்து இருபதினாயிரம் ரூபாய். அரசர் பிரதிநிதி லார்ட் ஹார்டிஞ்சவர்களும், பெங்கால் கவர்னர் லார்ட் கார்மிகேல் அவர்களும், இந்தியா உதவிமந்திரியாகிய கனம் மிஸ்டர் மான்டேக் அவர்களும், இவர் இந்தப் பரிசு பெற்றதைப்பற்றிக் கொண்டாடிப் பெருமை பாராட்டி யிவர்களுக்கு முகமன் கூறியிருக்கிறார்கள். கல்கத்தா யூனிவர்ஸிடி வைஸ்சான்ஸெலரும், ஹைகோர்ட் ஜட்ஜுமாகிய ஸர் அஷுடோஷ் முகர்ஜி அவர்கள் வரகவி ரவீந்திரநாத் தாகோர் அவர்களின் காவியங்கள் மன்பதை யெல்லாருக்கும் பொதுவாயுள்ள லக்ஷியம் பொருந்தியிருக்கிற தென்பது இதனால் ஐயந்திரிபறத் தீர்மானமாயிற்றென்று கூறுகிறார். இவருடைய 'பிரார்த்தனைக்கொத்து' இந்த "பாலபோத சமஷ்டி சேவை சாஸன"மாகிய விவேகசிந்தாமணி சஞ்சிகையின் முதற்பக்கத்தில் இங்கிலீஷிலும்; பதினாறுவதான 232-ம் பக்கத்தில் தமிழிலும் பிரதானமாக அச்சிட்டு வெளியிடப்பட்டிருக்கிறது. அதைக் குழந்தைகள் ஒவ்வொருவரும் நித்யப்ரார்த்தனையாக அநுஷ்டித்து வரல்வேண்டும். அதனால் சமஷ்டி சேவைக்கு வேண்டிய மனோபக்குவம் சித்திக்கும். இது உள்ளன்புடையார்க்கே பொருந்தும். டிஸம்பர்மீ 11௳ ஸ்வீடன் தேசத்தரசர் தாமே பரிசளித்தார்.

---

### The "Children's Day" Movement in India.

**INAUGURATED BY THEIR EXCELLENCIES LORD AND LADY HARDINGE.**

"The celebration of a "Children's Day" throughout India on the occasion of my birthday was the result of a suggestion which Lady Hardinge and I both thought to be admirable, and we have both tried to express our heartfelt thanks to the innumerable people who devoted so much time and trouble and money to making that celebration a success and a really happy day for children."

—*H. E. Lord Hardinge at Patna.*

### An Address to School Children.

### ஸ்ரீ ஹார்டிஞ்சு ஜயந்தி.

### குழந்தைநாட் கொண்டாட்டம்.

(மாக்ஷிமைதங்கிய ராஜப்பிரதிநிதி யவர்களின் ஜன்ம தினம்.)

---

Motto: "கற்றதோர் கல்வியும் மனப்பழக்கம்."

பள்ளியிற் பழகும் பாலர்காள்:—இன்று சாயங்காலம் நாமெல்லோரும் இங்கு உற்சவங் கொண்டாடக் கூடியிருப்பதன் காரணமென்ன? இன்று உங்களுக்கு விடுமுறை விட்டிருக்கிறார்களே, எதற்காக? ஸ்கூல்களையும் மற்ற இடங்களையும் அலங்காரம் செய்திருக்கிறார்களே; எதை யொட்டி? என்று கேட்பீர்களோ, இன்று நமது மாட்சிமை தங்கிய 5-வது ஜார்ஜு சக்ரவர்த்தியாரின் பிரதிநிதியாயும், இந்தியாவின் கவர்னர் ஜனரலாயும் இருக்கும் ஹிஸ்

எக்ஸலென்ஸி லார்டு ஹார்டிஞ்ச் (Viceroy and Governor-General of India) அவர்களின் ஜன்மதினம் ஆதலின், அதாவது பிறந்த நாளாதலின், இந்த தினத்தை ஒரு மகோற்சவ தினமாக எல்லோரும் சேர்ந்து கொண்டாடிக்குதூஹலிப்பதற்கே இங்கு கூடியிருக்கிறோம். லார்ட் ஹார்டிஞ்சு அவர்கள் உத்தமகுணம் வாய்ந்தவர்; ஸர்குண ஸம்பன்னர்; 'தேஹி' என்றவர்க்கு 'நாஸ்தி' என்று சொல்லார். இந்தியரிடம் அன்பும், இந்தியா வளம்பெறச் செழிக்க வேண்டுமென்னும் ஆர்வமும், ராஜபக்தியுள்ள இந்தியக் குடிகள் க்ஷேமமாய்க் காலங்கடத்தவேண்டுமென்னும் அபிலாஷையும் கொண்ட உத்தமராவர் அவர். ஹார்டிஞ்சு பிரபுவே 1910-ம் வருஷம் நவம்பர் மாஸம் 23-ந் தேதி முதல் ராஜப்பிரதி நிதியாய் அமர்ந்து பிரிடிஷ் ராஜரீகத்தை இங்கு நடத்தி வருகிறார். இந்தியாவின் பிரதான பட்டணத்தைக் கல்கத்தாவிலிருந்து டில்லிமாநகருக்கு மாற்றும்படி நம் மாட்சிமை பொருந்திய சக்ரவர்த்தியாரவர்கள் கிரீடதாரணத்திற்காக 1911-ம் வருஷத்தில் டில்லிக்கு விஜயம் செய்திருந்தபோது செய்த அவரது ஆஜ்ஞைக் கிணங்க, சென்ற வருஷத்தில் ராஜப்பிரதிநிதியான லார்ட் ஹார்டிஞ்சு அவர்கள் ஊர்கோலத்துடன் டில்லி நகரத்தினுள்ளே பிரவேசிக்கும் காலையில், சாண்ட்னி சௌக் என்னுமிடத்தில் எவனோ ஒரு பாதகன் இவ் வுத்தமரை மாய்க்கக் கருதி இவர்மீது வெடி குண்டொன்றை எறிய, ஈசுவர கிருபையினாலே அதற்குத் தப்பினாராயினும் வெடி குண்டிலிருந்து கிளம்பிய விஷச் சில்லுகள் அவரது சரீரத்திற் பாய்ந்து அவருக்கு மிக்க அஸௌகர்ய முண்டு பண்ணி, அவரைத் தொந்தரவுக்கு உட்படுத்தி விட்டன: எனினும், ஸர்வவியாபியான பரந்தாமனின் கடாக்ஷவீக்ஷண்யத்தினாலே, மலை போல் வந்த வில்லங்கம் பனிபோல் நீங்கி, உயிருக்கு ஹானி யில்லாமல் தப்பியது நம்மவர் செய்த புண்ணியமே. ஹார்டிஞ்சு பிரபு உயிர் பிழைத்தெழுந்தது புனர் ஜன்மமேயாதலால், குழந்தைகளுக்கு நாம் செய்யும் அப்த பூர்த்தி என்கிற ஆண்டு நிறைவுக் கொண்டாட்டத்தைப் போல அம்மகாப் பிரபுவின் ஜன்ம தினமாகிற ஜயந்திமஹோத்ஸவத்தை ஓர் ஸுதினமாகக் கருதி, ராஜ விசுவாச பரி பூரிதராய் நாமெல்லோரும் சேர்ந்து கொண்டாடுவோமாக.

பிள்ளைகாள், நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் இன்னும் ஒன்றுண்டு. இப்போது சிறுவராயிருக்கும் நீங்கள் இன்னுங் கொஞ்ச காலத்திற்குப் பிறகுப் பெரியராய் விடுவீர்கள்; அப்போது உலக உத்தாரணத்திற்கு அவசியமான கார்யங்களில் நீங்கள் பிரவேசிக்க வேண்டி வரும். அதற்குப் பிரதமமாய் வேண்டுவது இளமைப் பழக்கமே. இந்த அர்த்தத்தைக் கொண்டே ஆங்கிலக் கவிவாணர் ஒருவர்

"Boys of to-day become the men of to-morrow; upon them rests the responsibility of carryng on the wide world's work honourably and well with an ever-increasing tendency—so their early training is everything of importance."

என்று சொல்லியிருக்கிறார். இளமபிராயத்தில் இருக்கும் நீங்கள் வீணில் காலத்தைப் போக்காமல் ஸர்குண ஸம்பன்னர்களாய், பிரஜாலட்சணம் பொருந்திய பிரமுகர்களாய், ராஜ விசுவாசமுள்ள ஸமூஹத்தவராய் ஆவீர்கள். அக்காலத்தில் உங்கள் கடமையைத் திருப்தியாய்ச் செலுத்த விரும்பினால் உங்களுடைய இளமையையே நீங்கள் கருதுதல் வேண்டும்; இதற்காகவே "இளமையிற் கல்" என்று பெரியோர் சொல்லியிருக்கிறார்கள். உங்களுடைய தாய் தந்தையர்க்கு அடங்கியும், உங்களுக்குக் கல்விகற்பிக்கும் உபாத்தியாயர்களுக்குக் கீழ்ப்படிந்தும், சுருக்கிச் சொல்லுமிடத்து உங்களுக்குப் பெரியோராயிருப்பவரிடம் தணிந்தும் பணிந்தும் ஒழுகல் வேண்டும். நம்மையாளும் ராஜங்கத்தாரிடம் பக்தியும் விசுவாசமும் வைக்கவேண்டும்; நம்மையாள்பவர் பிரிடிஷ் துரைத்தனத்தார்; மாக்ஷிமை பொருந்திய 5-வது ஜார்ஜு சக்வர்த்தியாரின் ஏகாதிபத்தியத்திற்கு உட்பட்டிருக்கிறோம். அவருடைய பிரதிநிதியாக இந்தியாவுக்கு வந்திருப்பவர் லார்ட் ஹார்டிஞ்சு. இவர் தான் இப்போது கவர்னர் ஜனரலாயிருக்கிறார். இம்மகாப்பிரபுவின் ஜன்மதினத்தையே (ஜூன் மீ 20உ) நாம்கொண்டாடுகிறோம். எந்த துரை

த்தனத்திற்கு இவர் தலைமையாய் இந்தியாவில் தற்போது இருந்துவருகிறாரோ அந்த துரைத்தனந்தான் பிரிடிஷ் துரைத்தனம். மேன்மை பொருந்திய ராஜதம்பதிகளுக்கு 1911-ம் வூ டிசம்பர் மாஸம் 12வ டில்லிமாநகரில் மகுடாபிஷேகமான காலத்தில், பஹிரங்கப்படுத்தப்பட்ட ராஜவிளம்பரத்தினாலும், அதன் பிறகு சக்ரவர்த்தியாரின் திருவாக்கிலிருந்து வந்த திருவாய்மொழிகளினாலும், அவர்கள் இந்தியாவின் க்ஷேமத்தில் மிகுந்த கவலை கொண்டவர்களென்றும், அதில் மிக்க பற்றுடையவர்களென்றும், வெளிப்படையாகவே தெரிவித்திருக்கிறார்கள். அதற்கு அத்தாக்ஷியாக சக்ரவர்த்தியாரவர்கள் நம்மவர்க்குப் பற்பல நன்கொடைகள் கொடுத்திருக்கிறார்கள். அவற்றுள் பிரதம வித்யாபோதனாபி விருத்தியைக் கோறி 50 லட்சம் ரூபா சங்க்ஷன் செய்தது உங்களுக்குத் தெரிந்ததே. அரசர் பிரதிநிதி அதையொட்டி நம் குழந்தைகள் முன்னுக்குவர உள்ளன்புகூர்ந்து உண்மையான வித்யா லக்ஷ்யத்தை யளித்திருக்கிறார். ஆங்கிலேய அரசாட்சியில் நாமடைந்திருக்கும்பலன்கள்பல; ஆயினும் "தானுக்கனியாததை தடியெடுத்தடித்தால் கனியுமா" என்கிற பழமொழிப்படி ஒரு தேசத்தார் தன் முயற்சியால் முன்னுக்கு வரவேண்டுமேயன்றி அந்நிய சகாயத்தால் முன்னுக்கு வருவது அசம்பாவிதம். "Nations by themselves are made" என்கிற முதுரையை மனதில் வைத்து நீங்கள் எல்லாரும் நம் தேசத்தின் பூர்வமஹிமைக்கும் தற்கால நிலைமைக்கும் குறைவுவராமல் யோக்கியதையையே பெறற்கரும் பெருஞ் செல்வமாக மதித்து கிரஹஸ்தாச்சிரமம் என்பது குடித்தன மட்டுமென்றி "குடியின் தன்மை" (Citizenship) என்கிற உயர்பாவமும் அமையப் பெறும்படி உண்மைக்குகந்தவர்களாய் உலகுக் குபகாரிகளா யிருக்கச் சிறு வயதிலிருந்தே பழகிவரல் வேண்டும். ஹார்டிஞ்ச் பிரபு உங்களுக்களித்திருக்கும் புத்திமதியும் உண்மையில் இதுவே.

ஸ்ரீ ஹார்டிஞ்சு ஜயந்தியாகிய இன்றைய தினம் என்றைக்கும் திருநாளாக விருக்க இத்தினத்தை குழந்தைகள் கொண்டாட்டநாள் (Children's Day) என்று விசேஷம் பொருந்த நியமித்திருக்கிறார்கள். "நன்மை விதைத்தால் நன்மை விளையும்" "தீமைவிதைத்தால் தீமைவிளையும்" என்றபழமொழி நீங்கள் கேட்டுள்ளதே. நன்மைவிதைக்க இதுமிகவும் ஏற்றதோர் நன்னாளாகவிருக்கிறது. ஏனெனில் இந்த ஜூன்மீ 20வ இன்றைக்கு 55 வருஷங்கள் முன்னாற் பிறந்த ஒரு குழந்தை பாராளும் மன்னர் ஸ்தானத்தில் அவர் "நாவசைய நாடசையும்" என்கிற உச்சித ஸ்தானத்தி லிருந்துகொண்டு தனக்குத் தீங்குசெய்த பாதகனை நினைத்து சீறிச் சினந்து பிஷ்டஜனங்களை வதைக்காமல், "ஐயோ! இந்தியாவில இப்படிப்பட்ட மானிடப் பதர்களும் இருக்கின்றனவே," என்று கருணைபால் மனமிரங்கி அவனிழைத்த தீங்கை மறந்து பகவான் தன்னைக்காத்து ரக்ஷித்த அதிர்ஷ்டத்தைக் கொண்டாட வேண்டிக் கள்ளங் கபடறியாத குழந்தைமன மெல்லாம் தனது பெண்டு பிள்ளைகளோடு இந்த சுபதினத்தைக் கொண்டாட வேண்டு மென்று தீர்மானித்தது "நன்மை விதைத்தலேயன்றி வேறென்னும்!"

"குணநாடிக் குற்றமு நாடி
மிகைநாடி மிக்கக் கொளல்"

விவேகத்தின் இயல்பாம். அந்த விவேகம் அவரிடத்தில் பூர்த்தியாக விருப்பதாகக் காட்டி யதன்றி அதைக் குழந்தைகளெல்லாம் அறிந்து அதனால் விளையும் நன்மைபற்றி எல்லா ருள்ளத்திலும், விசேஷமாய்க் குழந்தைகளின் மாசுமருளற்ற வுள்ளத்தில் அந்த வித்து விழுந்து முளைத்து வேரூன்ற வேண்டு மென்று இந்த ஹார்டிஞ்சு ஜயந்தி ஏற்படுத்தப்பட்டது. ஆகையால் உருவத்தினால் மட்டுமன்றி உண்மையிலும் குழந்தைமனம் மாறாத அருட் குழவிகளான எல்லோரும் ஆஞ்சநேயரைப்போல் கைகூப்பி 'ஹிருதாஞ்சலி' செய்து கடவுளின் மஹிமையை ஆடிப் பாடித் துதித்துக் கொண்டாடுவோமாக. ஓம்தத்ஸத்

---

குழந்தைகள் அனுப்பிய வந்தனோபசாரத்தை அரசர்பிரதிநிதி யவர்கள் வரப்பெற்றுக்கொண்டு அதற்காக வந்தனமளித்தெழுதிய கடிதம் கிறிஸ்து பிறந்த நாளான (டிசம்பர் 25வ) இன்று வந்து சேர்ந்தது

189

The Viceroy's acknowledgment of the Students' and Children's Address with a copy of the same for transmission to Their Imperial Majesties, reached the Honorary Secretary at Madras on Christmasday, who desires to communicate the 'thanks' received to one and all concerned in furthering the "All India Children's Memorial Movement.

PRESS COMMENTS.

## The Viceroy's Visit.

"Among the various activities which the Viceroy's presence in our midst have excited, the most important though the least noisy is the Children's Movement, which has manifested itself in a way which is sure to gladden the Viceroy's heart, who from his place in the Imperial Council said: "It is to the students that my heart goes out and I feel that no sacrifice is too great for their welfare and education, for with their prosperity lie the future of this land and the destiny of India." The children's and student's address of Welcome to the Viceroy, presented through His Excellency the Governor, is a document worthy of permanent record in the educational archives of the Government of India. Even more important than the address is the picture-presentment of the children's address, a copy of which we have had the pleasure of examining with much care and deep interest. It is all very excellently put in the "Note from the Watch Tower" which accompanies the children's and students' address.

Here we see depicted in black and white "the future of India" with the child leading it on in the wake of True Progress. India's place in the World's Progress is depicted in a way so as to catch the eye of all. The incident of December last, the change of capital, the Viceroy's earnest appeal for co-operation "in the great task" of rightly settling" the large issues of Educational policy on which the future of India greatly depends "is viewed with a wide outlook and apart from personal or political interests" which makes the children's souvenir to their Excellencies Lord and Lady Hardinge the most interesting and remarkable thing produced during what we may call the Viceroy's Week. We hope to publish the address itself and the notes and other papers in our columns but we cannot conclude this short notice of the "Children's Record" literature that has been placed at our disposal without joining the Viceroy's invocation for the blessings of the Almighty on those who, at present as in future, "shall govern the great Empire for the good of the people and their steady advancement on the Path of Progress and civilisation under the protection and ægis of the British Crown",—which the picture-presentment of the Ideal before us so well and so truly portrays to the minds' eye. We wish the All-India Children's Movement all success and prosperity and trust it will appeal to "the Good of Heart and the Loving of Grace in all climes and times" to whom it is rightly dedicated.—*The Indian Patriot of 26th November.*

AN ADDRESS ON BEHALF OF THE CHILDREN.

"Among the Adresses which were informally presented to his Excellency was one on behalf of the student population and children of Madras by Mr. C. V. Swaminatha Aiyar whose interest and exertions in this behalf must be evident to our readers by his recent letters in our columns. The text of the address has been sent to us and conveys to His Excellency the heart-felt love of the children and their welcome to him in Madras. It refers to the noble ideal of citizenship and the national goal which was so clearly and attractively placed before Young India which they would strenuously endeavour to realise. Along with this address Mr. Swaminantha Aiyar has also presented three picture-presentments to which reference has already been made in these columns. The first is what he calls "picture-presentment of the New Ideal of Salvation through Social Service and sensible patriotism," the second (entitled "India's capital: A capital Idea") and third—entitled "REALIZATION:" "*A great Task*" (*1877—1913*)—are similar presentments of other incidents intended to convey mystic (spiritual) and metaphorical sentiments suited to the occasion."—*The Hindu of 26th Nov. 1913.*

## Cut here please and send—இங்கே துண்டு செய்து அனுப்பவும்.

### In honour of His Excellency the Viceroy's Visit.

"The Manager (Lalita Publishing Co.,) is informed that any number of copies the Editor can spare for distribution by the Inspectors and Inspectresses will be distributed as he wishes."—Procs. of the Director of Public Instruction.

"The secretary (Social Service Branch of the Ananda Missions Lalitalaya, Madras, S.) is further informed that such number of copies as he can spare for distribution will be circulated according to any wish expressed by him."—Procs, of the D. P. I. 2-12-1913. We wish every School and every child in School a Happy and Prosperous career and pray hat they may all live to *realise* the Noble Ideal of Social Service presented to them by the Viceroy in Council.

**Coupon No. 8043/13.**

**Date of Receipt**

**——————1914**

**Date of Reading out**

**——————1914**

**Date of despatch of coupon.**

**——————1914**

**Schools should seperately apply for picture-presentment of the Children's Address prepared as the children's Souvenir to their Excelincies Lord and Lady Hardinge. (This coupon should be cut and sent after duly filled in.)**

No.........

ACKNOWLEDGMENT-COUPON.

To The Lalita Publishing Co., Mylapore, Madras.

The Children's Record Number of the Vivekachintamani Specially Issued to Schools and children in honour of the Viceroy's Visit.

Received through the Inspector of Schools——Circle the above copy of the Vivekachintamani on——————1914.

The contents read out and explained to Students of the School and School-Children on ————

Coupon signed and despatched on——————1914.

Name of school—————— Signature——————

Address, Post Town—————— Designation——————

"A WELCOME BY SCHOOL CHILDREN."

"We have received a copy of the address which was placed before the Viceroy on behalf of the children of this city along with a "picture-presentment" of the same. It was originally intended to allow a limited number of children to the Banqueting Hall so that they may offer their welcome along with others; but later on, it seems to have been found out that no space was available for thechildren in the Hall itself. It was than their intention to assemble the children "in a sufficiently large number" "somewhere on the route from the Railway Station," but even this arrangement was given up at the eleventh hour, much to the disappointment of the non-official gentlemen who had worked hard on behalf of the children community. This decision of the authorities is to be keenly regretted especially in view of the interest which Their Excellencies Lord and Lady Hardinge have been known to take in the welfare of the Indian children. We hope to publish tomorrow the descriptive note of the picture-presentment prepared by Mr. Swaminatha Iyer and submitted to H. E. the Viceroy through the Private Secretary to the Governor."—*The Madras Standard, 26th November, 1913.*

SOCIAL SERVICE OR SAMASHTI-SHEVAI.

Mr. C. V. Swaminatha Aiyar, Honorary Secretary, Social Service Branch of the Ananda Mission, has written to the English Dailies, including the *Pioneer*, as follows:—

"Mr. Asquith, the Prime Minister of England, speaking at a demonstration held in London on behalf of the Cavendish Club, is reported to have defined Social Servic as "nothing but a recognition of the claim which the community has on its members who have had what is called a liberal education and who possess any available surplus either of means or of leisure." The Indian conception of social service or *Samashti-Sherai* as it is called according to the ancient ideal of education, is far more comprehensive and the duty imposed is far more imperative. For with the Indian it is not merely "a recognition of the claim which the community has on its members", but an assertion of a spiritual fact which every soul is bound to realise as a means of Salvation. Hence the name "Shevai-sadan" or Salvation through Social Service. Social Service is an imperative necessity imposed on every student of Social-life. You cannot rightly comprehend basic principles of complex Social-life without going through the experience of *Samshti-shevai* which is far more comprehensive than merely giving one's available surplus of means or of leisure to Society as a recognition of the community's claim on its members. It is rather a curing of the 'penury of heart', a means of salvation (Sadana) for the individual soul to realise the Oneness of its relation with the Universal Soul, through the common collective life of the community. In this sense it is an imperative duty on every individual soul and the only means for realising "the One Great Fact of Life" which is "Continuity". The inauguration of the "Children's Day" Movement in India, has opened wide the gates of Social Service and the Children's Movement now manifest is the result of it. As the Educational Review rightly remarks, the Movement is every thing in the study of public life and the men count for nothing except as representing that movement. When "the current that knows its way" fidds itself moving or set in motion by a power which is higher than itself, it knows how to shape its course and create the means for achieving the end which it has in view."